THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்தில் மொத்தம் லட்சத்து முப்பத்தோராயிம் ஏக்கர்தான 1956–57ல் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்பட்டிருப்பதாகக் காணப்பட்டிருக்கிறது. அதில் திருநெல்வேலி ஜில்லாவில் 2,500 ஏக்கர்தான் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரச்சனை எழவில்லை.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவில் மூன்றும் போக சாகுபடி எல்லா இடத்திலும் செய்யப்பட்டதா?. அதன் பயன் என்ன? திருப்திகரமாக இருந்தால் இந்த ஆண்டும் அவ்வாறு அனுமதி அளிக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சை ஜில்லாவில் 1957–58–ல் 6,516 ஏக்கர்கள்தான் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்படுகிறது. இன்னும் அதிகம் செய்திருக்கலாம். சில விவசாயிகள் அந்த வசதியைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. பயன்படுத்திக்கொண்ட விவசாயிகளுக்கு நல்ல பயன் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு இருக்கும் தண்ணீர் நிலைமையை ஒட்டித்தான் மூன்றும் போக சாகுபடியை அனுமதிக்காலாமா, இல்லையா என்று தீர்மானிக்கப்படும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தஞ்சை ஜில்லாவில் எத்தனை பேர் மூன்றும் போகம் சாகுபடி செய்யத் தயாராய் இருக்கிறார்கள் என்கிற பட்டியலை தயார் செய்துகொண்டு தண்ணீர் விட்டார்களா ? பயன் படுத்திக்கொள்ளுபவர்கள் கொள்ளட்டும் என்று தண்ணீர் விட்டார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சம்பந்தமாகக் கலெக்டர் ஒரு மகாநாட்டைக்கூட்டி எல்லா விவசாயிகளுக்கும் விளக்கிச் சொல்லி எவ்வளவு பேர் சாகுபடிசெய்ய வருவார்கள், எவ்வளவு தூரம் தண்ணீர் விட வேண்டும் என்பது தெரிந்தே தண்ணீர் விடப்பட்டது.

*Murder cases*

* 798 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58–ல் எத்தனை கொலைகள் சம்பந்தமாக போலீசில் எத்தனை கேஸ்கள் பதிவு செய்யப்பட்டன ?

(ஆ) எத்தனை குற்றப்பத்திரிகைகள் தாக்கல் செய்யப்பட்டன?

(இ) எத்தனை கேஸ்கள் தண்டனையில் முடிந்தன?

(ஈ) எத்தனை கேஸ்கள் நீதி மன்றத்தில் முடிவு பெறுமல் உள்ளன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 792.

(*b*) 667.

(*c*) 339.

(*d*) 149.

SRI S. M. ANNAMALAI : இவற்றில் கட்சித் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு? காதல் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : எந்தெந்தக் காரணத்தினால் கொலை நடக்கிறது என்று முன்பு கேள்விக்குத் தெரிவித்திருக்கிறேன். இப்போது அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

*Wool*

* 799 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மாடுகள், ஆடுகளிலிருந்து ரோமங்கள் எடுக்கும் தொழிலானது எந்தெந்த ஜில்லாக்களிலே நடைபெற்று வருகின்றன?